## கூடாரப் பாறை

# முருகன் திருப்பதிகம்

**ஸ்ரீமத் சிவத்தியானாநந்த மஹர்ஷி**
சிவகிரியில் தங்கியிருந்தபோது பாடியது.

1. அண்டினோர்க் காக்க மளிக்குநற் றேவே
யழகிய சிவபுரி புரக்கும்
அன்பன்செந் தட்டிக் காளைப் பாண் டியனா
மருஞ்சின்னத் தம்பியெக் காலுங்
கொண்டசெங் கோலைப் பரிவுடன் காத்துக்
குளிர்வுட னவற்கெலா வாழ்வுங்
கொடுத்தருள் செய்ய வடிச்சுவ டமைத்துக்
குறுமுனி தவத்தினைக் காப்பாய்.
மிண்டர்க ளாகி யிடும்பனோ டெண்ணு
மேன்மையில் கடம்பனு முனது
மெய்வலி யழிக்கப் பொருதபோ துமையாள்
விழைந்தருள் முசலத்தா லவரைப்
பண்டுபோற் சயித்தா யாயினும் அன்னார்
பண்புபெற் றுன்னடி யவராய்ப்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

2. *வற்சநா டாள்வோன் வற்சலன் பிள்ளை
மருவுறாத் தன்மையி னேங்கி
மகத்தவஞ் செய்து பெற்றபுத் திரனாய்
வாழ்புரு டோத்தனம் தீய
குற்சிதக் கோளின் வயப்படு நிலையாற்
கொண்டதன் னாட்டினி னீங்கிக்
கொடியவெங் காமக் குழிவிழு போகர்
கூறிய வெம்மொழிப் பயனாய்த்
தற்சிறை யுடலங் குட்டநோய் கவ்வத்
தாங்குறாப் புலிக்கர மடைந்து
தரையெலா மலைந்து நல்வினை தூண்டச்
சார்ந்திவ ணுனதடி புகல்பீ
பற்சனே யென்னப் பெருமையி னோங்கிப்
படிபுகழ் பிலிக்கர முனியாய்ப்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

[* இச்சரிதத்தைச் சிவகிரிப் புராணத்துக் காண்க.]

3. தாண்டலா விதியாற் பிரமஹத் தியினிற்
சார்பழி பெற்றபாண் டியனைத்
தையல ரிருவர் தம்மொடு மகல்வான்
சார்த்திய தோடுநில் லாம
லாண்டகை யின்மை யறிந்திடா னவரை
யடுத்துயிர் வாங்குவான் பலசா
ரணைந்துபன் னெறியிற் கொல்லுவான் பற்ற
வணுகிய தருணமெல் லாம்வந்
தீண்டிய வுதவி புரிந்ததே யன்றி
யித்தலத் தவன்மனை வியர் தீ
யிறங்கவு மவர்க்கு நீற்றினை யளித்தே
யெய்திய பழியினை யோட்டிப்
பாண்டியன் முன்போ னாட்டினை யாளப்
பரிந்தமீ னாம்பிகை சொக்கர்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

4. பெருந்தனம் படைத்த பெருமைசால் பலரைப்
பெற்றுளாய், அன்னவர் செல்வம்
பிறங்குநற் கல்விப் பயன்பெறு மறிஞர்
பேசுநற் பெருமையை யடைவான்
திருந்துறச் செய்த லுனது தண்ணளியாற்
சேர்வதே யன்றிமற் றெம்போற்
சீரிய ராலும் ஆற்றிட வரிதாஞ்,
செப்புவே னொன்றுகே ளிந்நாள்
வருந்துற நின்ற மிடியெலா மோட்டும்
வள்ளலென் றுலகவர் புகழும்
வண்ணமிச் சீமைச் செல்வர்த மரசை
வயக்குவாய், மாகத ரெல்லாம்
பருந்துசெல் லுயர மெழுந்துநாக் கடிப்பாய்
பகர்ந்திட முயக்குவை, தேவர்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

5. பேரிலார் சொல்லு முயர்ச்சிசா லூரும்
பேசுதற் கில்லவர் பல்லோர்
பேரியாழ் போற்றப் பேகனே பாரி
பின்னுறாக் காரியென் றேத்தி
நேரலார் புகழ நிற்க, வுன் றெய்வ

நிலையினி னோங்கிய நிருபன்
நின்றவூர் தானுந் தெரிகலா வகையே
நிலவுத் லெங்களுக் கெல்லாம்
தேரலாத் துயர மளிப்பது வாகும்;
செய்யவ, மூன்றுல கத்துந்
தெழிப்புறு கீர்த்தி பரவுற விரைவிற்
செய்குவை, சிறந்தவுன் பெருமை
பாரெலாம் விளங்க வெண்ணினே னுண்மை
பகர்ந்தனென் **தேவி**யென் ஆறு
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

6. கூடலம் பதியே தமிழ சோங்கிக்
குணம்பெறு பதியெனின், அந்தக்
கூடலம் பதிவாழ் அங்கயற் கண்ணி
கூடிய சுந்தரத் தேவும்
தேடலா வகையே யுன்னரு கிருக்கத்
தேடிவந் துறைந்துளா ரென்னின்,
செப்பு மெட்டெட்டுத் திருவி ளையாடல்
திகழ்வதித் தலமெனக் கூறிப
பாடலோ டாடல் புரிவது பிழையோ,
பார்ப்பவர்க் கதுவொரு குறைவோ,
பண்ணவா, வுன்னைப் பார்த்தவர் பாவம்
பசையறப் பறத்தலைத் தேர்ந்த
பாடகரென்றுஞ் சிவகிரி சேரீர்
பாடுவீர் பரமனை யெனுஞ்சொல்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்த்ரைப் புரக்குநன் மணியே.

7. ஆற்றிலே வீழ்ந்து தன்னுயிர் விடுக்க
வகுத்தவுத் தமன்புலிப் பாணி
யாறுசாத் திரமு மறிபவ னாக
வாக்கினை; அங்கியில் விழுந்தே
சாற்றிய பழியை நீக்குற நினைத்த
தையலர்க் கருளினை நீறு;
தக்கநற் குடத்துற் பவித்தவன் போற்றச்
சார்த்தினை பாறையிற் *பதத்தைக்
கூற்றினை யுதைத்த பண்ணவன் அடியர்
கூப்புறுஞ் சிரமென மதித்தே;
கொற்றவ வுனது நற்றவம் வாய்ந்த
குலப்பெரி யார்பலர் வாழும்
பாற்றரும் பசுமைப் பலவள நிறைந்து

பண்புசா லுத்தமப் பதிகள்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

[* அடிச்சுவட்டை.]

8. வீரருள் வீரர் பாவலோர் தம்முள்
மேவிய வுத்தமக் கவிகள்
விரைவினிற் றங்க ளுயிரையு முதவி
மேன்மைசார் புகழ்விரி மகருந்
தீரரூட் டீர ரென்றுசொல் பெருமை
சேர்ந்தவர் பலபெயர் தாமும்
திகழ்தரு நாடு பாண்டிநா(டு); அதனிற்
றிலதமாஞ் சிவகிரி யிதுதான்
சீரிய குணம்வாய் தொல்பதி யாகுஞ்;
சிறப்புற வன்னதைப் புரக்குஞ்
செழியனோ வென்னிற் சிவன்செய லன்றித்
தேருறான் மற்றொரு செயலைப்,
பாரினி லவண்பேர் பரந்தவிவ் வுலகிற்
பாவுறச் செய்யு(ம்)நி னுண்மை
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

9. உத்தமத் தேவே யோங்குபன் மாலை
யுரைத்துளே னென்னினும், உன்சீர்
உற்ரவென் செவிதா னுன்னையும் புகழ்
வுரைத்ததா, லென்மன மிரும்பி
னத்தனை வன்மை யுள்ளதே யெனினும்
அருட்கட லுனதளி உடனே
யன்னதைக் கரைத்(து), அகமகிழ்ந் தன்னை
யடுத்தவென் நாவினி னின்றே
புத்தியை யுணர்வைப் புகலுறு மொழியைப்
புண்ணிய நெறியினைப் புகன்றாள்,
பொய்யர்தா மறியாப் போதமே யுனது
பொய்யில்சீர் வழுத்தினே னருள்வாய்,
பத்தியிற் படிந்த அடியவர் பல்லோர்
பரபரப் புடனரு கடுத்துப்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
பக்தரைப் புரக்குநன் மணியே.

10. என்றுயர் தீர வெனக்கருட் செல்வ
மளித்திடல் வேண்டு, மென் றன்னை

யின்பினிற் காக்கு மவரெலாங் கீர்த்தி
        யியைந்துபல் வளங்களுந் தோய்ந்து
மன்றினி னடஞ்செய் தாதையின் பூதி
        மருவியே திகழ்தரல் வேண்டும்,
மாதவத் தோர்க ளுன்னரு கென்றும்
        மருவுமவ் வளமுன திடத்தே
துன்றிடல் வேண்டுந், தூயவுன் னடியைத்
        துகளற மொழிபவ ராக்கந்
தோய்ந்திடல் வேண்டு, முலகெலா மின்பச்
        சுகம்பெறு வாழ்வுறல் வேண்டும்,
பன்றியாய் மீனங் கமடமுற் பலவாய்ப்
        பரிந்துல களித்தசெந் திருமால்
பழகுகூ டாரப் பாறைவாழ் முருகா
        பக்தரைப் புரக்குநன் மணியே.